மோசே



# பாடத் தெரியாத பன்னீர்ப் பூக்கள்



கவிதாபானு
வழங்குவது

# பாடத் தெரியாத பன்னீர்ப் பூக்கள்

மோசே

கவிதா பானு
வழங்குவது



54, போர்ச்சுக்கீசிய மாதா கோயில் தெரு,
சென்னை-600 001.

பாடத் தெரியாத

பன்னீர்ப் பூக்கள்

□

மோசே

□



□

முதற்பதிப்பு :
நவம்பர் 1983
வெளியீடு எண் : 49

□

ரூ. 4-50

□

முகப்பு :
அமுதோன்
எலிகண்ட் பிராசஸ்
பெலிகன் இண்டியா

□

அச்சிட்டோர் :
விசாலம் பிரிண்டிங் ஹவுஸ்
25, தெற்கு சிவன் கோயில் தெரு,
சென்னை-600 024.

□

நூலாக்கம் :
பெ. நா. சிவம்

□

கவிதாபானு
சென்னை-600 001.

# கன மழைக்கான மேக அடையாளம்!

கவிஞர் "மோசே" அவர்களின் கனல் மணக்கும் கவிதைப் பூக்கள் வாயவிழ்ந்து வண்ண மகரந்தம் சிந்தும் ஆம்பல் மலர்களாக அழகு காட்டுகின்றன.

மங்கலான வெளிச்சம் அடிக்கிற ஒரு நிலாப் பொழுதில் கருநீலக் கடலுக்குள், வெள்ளை மீன்கள் பேசுகிற சங்கேத மொழிபோல் எனது செவிப் பலகணிகளில் ஒரு செய்தி குறு குறுத்துக் கொண்டிருக் கிறது.

கால மணற் பரப்பில் தடம் பதித்து நடப்பதற்கு புறப் பட்டிருக்கிற இந்தக் கலைமானின் கால்களில், அரபுக் குதிரைகளின் அழுத்தம் எனக்குத் தெரிகிறது.

சுறு மீன்களின் சுழற்சி கண்டு, சிதறி ஓடுகிற கணவாய் மீன்களைப் போல் அல்லாமல், பாலை மணல் வெளியில் தடம் அழிந்த பிறகும், சுவடுகளை முகர்ந்து சூட்டிப்பாக முன்னேறும் ஒட்டகத்தின் உறுதி எனக்குத் தெரிகிறது.

மகரந்தத் தேன் கலந்து மருவ வருகின்ற ஆலோலத் தென்றலில் பலமான பல்சுவை நாசித் துவாரங்களில் இடம் கேட்பதாக இருந்தாலும், இது ''ஒரு கோட்டுப் பூவின் நாட்டு மணம்'' என்பது எனக்கு நன்றாகவே தெரிகிறது.

பல கவிஞர்களை அவர்களது கவிதைகள் எனக்குக் காண்பிக்கின்றன. கவிஞர்களைப் பார்த்தாலும், கவிதைகளின் ஆழமும், அழகும் தெறிப்பாகவே தென்பட்டு விடுகின்றன.

கவிஞர் வேறு; கவிதை வேறு அல்ல. எப்போது கவிஞன் தன்னிலிருந்து வழிகின்ற கவிதையிலிருந்து வேறுபட்டவன் என்று உலகம் விளங்கிக் கொள்ளுகிறதோ, அப்போதுதான், நல்ல கவிஞர்கள் கூட ''நகம் கிழிந்த சதையாக'' அல்லல்பட ஆரம்பிக்கிறார்கள்.

''மோசே'' அவர்களின் எழுத்துக்களைப் பொறுத்தவரை அவரது கவிதைகளால் நான் அவரை உணருவதைவிட, அவர் வாயிலாகவே அவரது கவிதைகளை நெஞ்சார நினைக்கிறேன்; நினைவாரப் போற்றுகிறேன்.

இந்தக் கவிஞர் தனது ''முதல் குழந்தை''யைத் தன் கரங்களில் ஏந்துவதைப் போலவே, இவரை நான் ஏந்தியவன். தோளிலிட்டு, அவரைத் தூங்க வைத்தும், அவர் நடைபயின்ற காலத்து வெடுக்கென்று விழாது பிடித்தும், சென்ற இடத்தில் வாராதிருந்தால், தேடி அலைந்து திரும்பக் கொண்டுவந்தும், இவரை உருவாக்கியதில் சிறிதெனினும் எனக்கு ஒரு சிறப்பான பங்கு உண்டு. இவர் எனது அண்ணன் மகன். இப்போது அதற்காக நான் தாலாட்டவில்லை. அவரது எழுத்து என்னை ஈர்த்த காரணத்தாலேதான், வீழ்ந்து கிடக்கிற மானுடத்தை இந்த எழுத்துக்கள் தொட்டுத் தூக்கும் என்று நான் நம்புகிற காரணத்தாலேதான் இந்த வரிகளை எழுதலானேன்.

''காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு'' என்பார்கள். நான் காகமல்ல; ஆகாயம். கவிதையாக வராத ஒன்றை நானே எழுதுவதாக இருந்தாலும், அதைக் கிழித்துப் போடுகிற முதற் கரம் எனதாகவே இருக்கும். அந்த வகையில், ஒரு தேவ வேளையில், தவ விடியலில், மழைக்குமுன் வருகிற மண் வாசனையாக, பேரி மரத்துப் பூக்களாக இந்தக் கவிதைகள் மண்ணை முத்தமிடுகின்றன.

இவர் சின்னவராக இருந்தபோது, எங்காகிலும் கார் அவிழ்ந்து கிடந்தால், கடைக்குப் போகிற இவர், அங்கேயே பலமணி நேரம் பரிவோடு நின்றுகொண்டிருப்பார். பொறியாளராக வருவார் என்றுதான் எல்லோரும் எதிர்பார்த்தோம். பொறி வண்டின் ஓசைக்கும் பொருள் சொல்லுகிறவராக காலம் இவரை மலர்விக்கும் என்று அப்போதே எங்களுக்குப் படவில்லை.

இவரது மின்னல் எழுத்துக்கள்- விழப்போகிற கன மழைக்கான மேக அடையாளங்கள். அடிமை இரவுகளின் முடிவை அறிவிக்க ஆலோலம் பாடிய-காந்தாரக்கலை மின்னும் கற்கண்டு சொல்மாரியாக - நம்மிடையே வாழ்ந்த அறிஞர் அண்ணாவை நினைந்து உருக்கத்தோடு இவர் வடித்த உயிர்ப் பாட்டு ஒன்று, எனக்கு உவப்பானதில் வியப்பில்லை.

விடி காலைப் பொழுதில் நீர் தெளிக்க வருகிற பறவைகளை என் பிள்ளை இவ்வளவு நிதானத்தோடு பார்க்கிறது என்பது கூட அவரது பன்னீர் வரிகளிலேதான் எனக்குப் பளிச்சிடுகிறது. ஹாம்லெட்டைப் பற்றி இவர் எழுதுகிற சோகம் ததும்புகிற சுந்தர வரிகள், காலக் கிழவனின் ஊமைக் கனவுகளைப் போல கண் வளருவதைப் பார்க்கின்றோம்!

தேசபிதா பற்றிய ஒரு பாடலில் உப்பு-மானம் இவற்றை வைத்து இவர் ஆடுகிற சொற் சிலம்பம், அதில் தொட்டில் கட்டி தொடர்ந்து ஆடுகிற பொருள் அழகு, இவற்றிற்கு எனது வாழ்த்தும் வரவேற்பும் என்றும் உண்டு.

"பாடத் தெரியாத பன்னீர்ப் பூக்கள்" ஒரு கண்ணீர் அஞ்சலிபோல கரைந்து உருகும் தலைப்பாக இருந்தாலும் பாடல்களில் இறுக்கமான ஒரு உப்பு வண்டியின் ஊர்வலத்தையே நான் பார்க்கிறேன்.

இவர் தொடர்ந்து எழுதி மனிதனைப் பாடுகிற எழுத்துக்கும்; இனம், மொழி என்கிற சுற்றுச் சுவர்களை உடைத்து, மானுடத்தை நேசிக்கிற எண்ணத்திற்கும், எழுச்சி மிக்கக் கவிதைத் தலைவராக வேண்டும் என்பது எனது கனவு.

பாடத் தெரியாத பன்னீர்ப் பூக்கள்; வாடத் தெரியாத மல்லிகைகளாக வாழ்ந்திருக்க வேண்டும் என்று வாழ்த்தி மகிழுகின்றேன்.

சென்னை
14—11—1983

என்றென்றும் அன்புடன்
வலம்புரிஜான்

# எனது பக்கத்தில்...

ஒரு தமிழ் வருடத்தின் வாசலில் நின்றுகொண்டு வெயில் வேகமாக விசாரணை செய்து கொண்டிருந்த மாதமது. நிர்மலமான வானத்தில் நிலா முழுமை பெற்றிருந்த ஒரு பௌர்ணமி நாளில் நான் இந்த பூமிக்கு வந்ததாக எல்லோரும் எனக்குச் சொன்னார்கள். எனது ஆரம்ப நாட்களை நினைத்துச் சொல்கிற நேர்த்தி எனக்கு இல்லைதான்.

ஆனாலும் வெளிச்சத்திலும் இருளிலும் விழுந்து காலத்துக்கு கால் வழுக்கிக் கொண்டிருக்கிற இந்த இருபத்து நான்கு ஆண்டுகளில், இரவு கலந்து வருகிற பகலைப் போல எத்தனை மாறுதல்கள்! எனது கனவுகள் முகம் கழுவிக்கொண்டு வெளியில் வந்து நிஜமாகிப் போன நிகழ்வுகள் எத்தனையோ உண்டு.

அது, எனது பள்ளி நாட்களில் பட்டுப் போகாத ஒரு நாள். உதை பந்து விளையாட்டு ஓய்ந்து போகிற ஒரு மாலை வேளையில் பூமியைக்கூட கொஞ்சம் வேகமாக உதைத்து விட்டேன். உதைத்தவுடன் இந்த உலகப் பந்து உருண்டு போகும் என்று எதிர்பார்த்தேன்- எதிர்பார்க்கிறேன்- இன்னும் எதிர்பார்ப்பேன். நான் நடக்கா விட்டால் பூமி சுற்றுது என்பது எனது நம்பிக்கை. அது முதல் முறையாக பூத்திருக்கிறது. அதுதான் இந்த முதல் புத்தகம்.

கவிஞன் என்பான் இருளிலே இருந்து இன்பத்தைப் பிரசவிக்கிற குயிலைப் போலாவான் என்பார் ஷெல்லி.

(Poet is a Nightingale who sits in darkness and sings to cheer it's own solitude -- SHELLY)

இந்த வார்த்தையோடு நான் அவசரமாக சமரசம் செய்து விடுகிறேனில்லை.

'இருட்டை எரிக்கிறவனுக்குப் பெயரே கவிஞன்' இப்படித்தான் என்றால் சொல்ல முடிகிறது.

அதிலும், புதுக்கவிதை பூக்கிற நாட்கள் இது. மரபுகளை மறுதலித்து விட்டு- சந்தங்களுக்கு சவப் பெட்டி செய்துவிட்டு- இலக்கணங்களுக்கு இறுதி ஊர்வலம் நடத்திவிட்டு, மரணப்பட்டு கிடக்கிற மரபுக் கவிதைகளைப் பார்த்து இதுதான் புதுக் கவிதை என்றால் யார்தான் ஏற்பார்கள்? இலக்கணம் இல்லாவிட்டால் எல்லாமே புதுக் கவிதைகள் என்றால் அதை எதிர்த்து போடுங்கள்.

என் கவிதைகள் அந்த பட்டியலை பங்கு போடுவதில் எனக்கு சுத்தமாய் சம்மதமில்லை.

சமுதாயத்தின் சாலைகளில் சருகுகளைப் போலக் கிடந்து சங்கடப் படுத்துகிறவைகளை எனது சண்டமாருத கவிதைகளால் சலவை செய்ய வேண்டும்.

கருத்துமில்லாமல் கலையழகுமில்லாமல் கவிதைகளை காயப்படுத்துகிற எந்த மனிதனுக்கும் கவிஞன் என்கிற அங்கீகாரத்தை மானுடம் தருவதில்லை என்று நம்புகிறேன்.

எனவேதான் நான் உணர்ந்து எழுதியிருக்கிற இந்தக் கவிதைகள்- பட்டுப்பார்த்து உங்கள் பார்வைக்கு வைக்கிறவைகள். என்னில் எவைகள் இந்தக் கவிதை

களை செய்தனவோ அவைகளையே உங்களில் உருவாக்கிட வேண்டும் என்று ஆசைப் படுகிறேன். அது விளையும் என்பது விதி.

காதல் கவிதைகளை நான் இந்தக் கருவறையில் வைக்கவில்லை- வாலிபர்களையும், காதலிக்கிறவர்களையும் பாதிக்கிற விஷயம்தான்- காரணம் நான் இன்னமும் காதலிக்காமலும் காதலிக்கப்படாமலும் காத்திருக்கிற கன்னிக் கவிஞன். அதையும் உணர்ந்து கொள்ளுகிற நாள் வந்தால் உங்களுக்குக் கடிதம் எழுதுவேன். அது வரை விட்டு வைக்கிறேன்.

எனது கவிதைகள் சத்தியமாய் ஒரு சரித்திர எதிர் பார்ப்போடு சிரித்துக் கொண்டிருக்கிறது. அவலங்களைக் கிழித்துப் போட்டு நான் ஆனந்திப்பேன். சமுத்திரத் தைப் பிழிந்து அதன் சத்தை என் சந்ததிக்குக் கொடுப் பேன். அப்போதுதான் இந்தச் சமுதாயத்துக்கு உணர்ச்சி வரும்.

என் எண்ணங்கள் நிறைவேற நான் எதிர் நீச்சல் போடுவேன். இமயத்தைப் போல எந்தச் சூருவளிகளை யும் பிளந்து போடுவேன்.

இனி...

என் மீது வெயில் விழுந்தாலும் குளிர் தொட்டாலும் துவண்டு போகிற என் தாய் லூயிஸ் அம்மாள்- எனது எழுதுகோலுக்கு இப்படியொரு வீரத்தைச் சொல்லி, எழுத்து வித்தையை எனக்குச் சொல்லித் தந்த என் தந்தை டாக்டர் மோகன்- எனது எழுத்துக்கள் கிழிந்து போகாமல் என்னை சுத்தப்படுத்துவதில் அக்கறை கொண்ட என் சித்தப்பா வலம்புரி ஜான் ஆகியோரின் திருப்பாதத்தை மனதால் தொட்டுக்கொள்கிறேன்.

இந்நூல் பற்றி நினைத்துக்கொண்டு என்னைத் தூண்டிவிட்டு எனது இருதயத்தில் நம்பிக்கைத்

திரிகளுக்கு எண்ணெய் வார்த்த என் அம்மான் இருதய ராசு- சகோதரிகள் ரொசாரி, ஆக்னஸ், என் நண்பர்கள் சண்முகம், மோகன், பிரபாகர் எல்லோருக்கும் எனது நினைவில் பங்குண்டு.

என்னோடு ஒரு அண்ணன் பிறக்காத குறையை தினந்தோறும் தீர்த்து வைக்கிற திருச்சி வீராச்சாமி, மாருத பாசமுடைய வழக்கறிஞர் மருதப்பா, அன்புள்ள கு. ப. கிருஷ்ணன் அவர்கள், அண்ணா தொழிற்சங்க தலைவர் வெங்கிடசாமி- எல்லோருக்கும் என் மீதிருக்கிற பாசத்தை நான் நினைத்துக் கொள்கிறேன்.

எனது கவிதைகளை வெளியிட்டு வழிகாட்டி எனது விலாசத்தின் மீது வெளிச்சம் வீசிய தாய், கல்கி வார இதழ்கள், சலேசியச் செய்திமலர் எல்லோருக்கும் என் நன்றி.

இப்படிக்கு

பாடப் படிக்கிற
ஒரு புதிய பன்னீர்ப்பூ
அன்பன்
**மோசே**

திருச்சி-2
29-10-83

# அந்த நர்மதை நடந்தபோது...

காஞ்சிபுரத்தின் கண்களில்
எப்படி வந்தது
கர்வத்தின் கதிர்வீச்சு?

மொட்டுப் பூக்களில் கூட
ஒரு மோகன போதை.

தென்றலுக்குக் கூட
புயலாய்ப் போகிற
புதுப்புது தெம்புகள்.

பல்லவ பர்வதங்களில்
பரிசுத்த பாஷை பல்லவா
பதிந்து கிடந்தது!

அந்தப் பிறைக்கோடுதானே
ஒரு
பௌர்ணமி நிலவுக்கே
முள்ளந்தண்டானது!

திராவிட நதிகளில்
மௌனப் பிரளயங்கள்.

அன்று
திராவிடக் கனவுகள்

இமைகளுக்குப் பின்னுல்
இருப்பதில்
சம்மதமில்லாத ஜனனம்.

அந்த நர்மதை
நடந்த போது
மானுட மணல் வெளியில்
மன்மத லாகிரி!

நதியோரத்து
நாணல் எல்லாம்
மூங்கிலாக
முதுகு நிமிர்த்திக் கொண்டது.

இந்த இனத்தின் மீது
அவன் ஒரு
சீதள ஸ்பரிசம்.

ஒருமைப்பாட்டின்
உச்சரிப்பால்
உடைந்து போனது
தமிழின் உதடுகள்தான்.

கதரின் கர்த்தாக்கள்
அன்னைத் தமிழுக்கு
ஆபரணமாய்ப் பூட்டியதே
விலங்குகள்தானே!

கதர்க் குல்லாய்
போட்டிருந்த
காங்கிரஸ் காற்று
இந்த மலையில் மோதி
எத்தனைத் துண்டாய்
கிழிந்து போனது!

'திராவிட நாடு'
ஒரு புதிய தேசத்துக்காய்
எழுத்துகள்
அஸ்திவார அவதாரமெடுத்த
ஆதாமின் தோட்டம்!

எழுத்துகள்
இறக்கையை
முறித்துக் கொண்டு
தவமிருந்த வனமல்ல
ஈட்டிகளாய்
எழுந்து போன
அம்பின் ஆசனங்கள்!

நாடாளுமன்றத்தின்
நடைபாதைக்குக் கூட
ஒரு
நாகரிக முலாம்
பூசிவிட்டது
அண்ணன்தானே!

அவனை
சிவப்பு அணுக்களால்
சித்திரம் வரைந்து
மனதின் முகத்தில்
ஒட்டி வைத்தோம்.

அவனை
நினைத்தே
திராவிடம்
திசைகளை
திருத்தி எழுதிக்கொண்டது!

அந்த
நிதர்சனத் தலைவனுக்குக்
காலத்தின் எல்லை
சுருங்கிப் போயிருந்தது.

ஒரு
நியாய நேரனின்
நினைவுக்கு
இப்போது
செம்பவளம்
சேர்த்திருக்கிறோம்!

# இரத்தம் சிவப்பில்லையோ

வானம்
வெளிச்சத்தைத்
தூசியாகத் தட்டிவிட்டு
கறுப்பு வண்ணத்தை
கட்டிக்கொள்கிற வேளை.

இமையின்
முகத்தில் கூட
எத்தனை சோகம்!

தூக்கத்தின்
தேகத்தில் கூட
துக்கத்தின்
வாடையடிக்கிறது!

கண்ணின்
உள் இருளுக்கும்
உலக இருளுக்கும்
இடைவெளி
இமை மட்டும் தான்.

இரவின் கறுப்பில் கூட
ஒரு
இரத்தச்சுவையிருந்தது.

எனது
கண்ணின்
கருவிழி
கனத்தின் இருதயமானது

○

இரத்தத்தின்
கெட்டிமம்
எனக்குத் தெரியாது.

ஆனாலும்
காற்றில் கலந்துவிட்ட
இலங்கையின்
இரத்த நெடியும்
கனவுகளில்
ஒன்றிவிட்ட
ஓல ஒலியும்
எனது
இதயத்தின் சதைகளில்
ஒட்டிக்கொண்டது!

ஆமாம்
வலியாய் வதைக்கிறது.

○

ஓ!
என் தமிழ்த்தாயே!
உனது பெயரைச்
சொன்னதற்காக
உன் பிள்ளைகளின்
பெயர்களுக்கே
அடி விழுகிறதே!

உனது
பாதத்தை நினைத்ததற்காக

எங்கள்
தலையல்லவா
கொய்யப்படுகிறது!

இரண்டாயிரம்
இருதயங்கள்
எரிந்த தீயின்
முனை எங்களைத்
தொட்டபோது
கண்ணீரைவிடக்
கனமான பொருள்
கைகளுக்கு
எட்ட வில்லையே!

O

பச்சையத்தை இழந்து
பட்டுப்போன
போதி மரங்கள்
அங்கே
ரத்தம் குடிக்கிறது.

காவியுடையணிந்த
கரையான் குஞ்சுகளுக்குத்
தமிழனின்
குருதிச் சிவப்பிடம்
எத்தனை
சிநேகம்!

ஒரு ஆணின்
ரத்தத்தை
அலிகள் குடிக்கலாமா?

அலித்தன்மையை
ஆண்மையென்று

அங்கீகாரம்
செய்துவிட்டு
அரசாங்கம் அல்லவா
குருதி குடித்த
கத்தி முனைகளுக்குக்
காவல் இருந்திருக்கிறது!

அரசாங்கமே
ஐந்தாம் படையாக
அலைந்திருக்கிறதே!

தாயே!
உலர்ந்து போன
மனவெளிக்கு
உன் பிள்ளைகள்தானே
உதிர தானம்
செய்கிறார்கள்!

தண்ணீரிலே விட்டு
தாக சாந்தி
நடக்கிறதாம்!

குட்டி மணி-
இவனுக்கு
இலங்கைத் தீவிலே
இரத்தப் பரிசோதனையாம்!

இவன் உடம்பில்
வெள்ளையணுக்கள்
இல்லையாம்...

எல்லாமே
விடுதலையணுக்களாம்!

இரத்தம்
சிவப்பு நிறமில்லையாம்...
சுதந்திர நிறமாம்!

அதனால்தான்
சிங்கள நாய்களுக்கு
ருசித்தது போலும் !

○

கனாக்கண்டதற்காக
ஒரு
கண்ணுக்கே
மரண தண்டனையா ?
தமிழ்
ஈழத்தை
கனவு கண்ட
இவன் கண்ணுக்கு
என்னதான்
தாகமோ !

இனி உதயங்கள்
இவன் கண்ணிடம்
ஒளி கேட்டு
தவமிருக்கும் !

தாயே !
புத்தனை தத்தெடுத்த
பூபாகம்
உன் புத்திரனின்
சுவாசத்தைச்
சூதாடியிருக்கிறது !

வெளிக்கடை
சிறைச்சாலை அல்ல
விடுதலைப் பாடசாலை !

எத்தனை
வீட்டுப் புருக்களுக்கு
விதவைப்பட்டம்
தந்திருக்கிறது !

எண்கள்
எண்ணியே
தோற்றுப் போனதா ?

இலங்கை ரணங்கள்
எங்கள்
கால் எலும்புகளின்
காகித பலத்தைக்கூட
காயப்படுத்துகிறதே !

இங்கே யாருக்கும்
எழுகிற
திறமில்லை...
இந்திய விலங்கு
எலும்பின்
முகத்துவாரங்களை
எப்படி வதைக்கிறது !

நாக்குகளின்
நரம்புகளில் கூட
ஒரு
நவீன நச்சு வியாதி.

**கண்ணீருக்குக் கூட**
**காவல் போடுகிற**

கடைசிச் சட்டம்
கதவைத் தட்டும்.

அணைகளின்
கதவங்களுக்கு
எங்கள்
கண்ணீர்த்துளிகளே
சவால் விடும்
காலம் வரும் !

திறந்து விடுங்கள் !
இல்லையெனில்
தாகத்தின் தவிப்பெடுத்தால்
தானுகத் திறந்துகொள்ளும் !

○

துச்சாதனர்கள்
துகிலுரித்தார்கள்
ஐவருக்கும்
பத்தினியை அல்ல
ஒருவனுக்கே
உடைமையான
**உத்தமியை !**

**கண்ணனைக்**
**காணவில்லையே !**
**துகிலை மட்டும்**
**தொட்டிருந்தால்**
**வந்திருப்பான்**
**தோலையே**
**உரித்ததால்**
**துவண்டு போனானே ?**

சிங்களக் கண்ணுக்கு
கருணையின் பாஷை
கடுகளவும்
தெரியாதோ ?

உதிரம் குடிக்கிற
ஓநாய்க்கு
பதிகம் படிக்கிற
பண்பா வரும் ?

இரக்கத்தின்
இரத்தமா
சுரக்க முடியும் ?

இலங்கையில்
தெறித்த
இரத்தத் துளிகள்
எங்கள்
இருதய சங்கமத்தில்
இறங்கிவிட்டது !

இனி,
இங்கே இன்னுமொரு
தேசிய கீதத்துக்கு
தொகையரு
துவங்க ஒரு
தேதி செய்வோம் !

# பாடத்தெரியாத பன்னீர்ப் பூக்கள்

ஒரு பனிநாளில்
பால் நிலா
பவுர்ணமியை
கொட்டிவிட்டு
வெற்றுப் பாத்திரமாய்
வீடு திரும்பும் வேளை...

கண்ணீரை மட்டுமே
படித்துப் படித்து
எனது கண்ணின்
வெள்ளைப் பிரதேசம்
நாணிப் போனது.

விடிகாலையின்
முகத்தில்
வெளிச்ச நீர்
விழுகிற வேளை...

வீட்டின் முற்றத்தில்
வெள்ளைக் கோடுகளுக்கு
'கோலம்' என்ற
பட்டம் தந்து
பதவிப் பிரமாணம்
செய்து வைக்கிற
ஒரு
புருவின் தரிசனம்.

அந்தக் கோலத்தின்
பாஷையை அர்த்தப்படுத்திய
மானுட அகராதியை
நான்
தேடிப் பார்க்கிறேன்.

இருளின் கறுப்பு
இமைகளைத் தாண்டி
இப்போது
இளையவர்களின்
இருதயம்வரை
இறங்கியிருக்கிறது.

'வரதட்சணை' வார்த்தைக்குத்
தினவெடுத்த போதெல்லாம்
இந்தக் குயிலின்
இதயம் தானே
சரண்டப் படுகிறது!

வானம்
நட்சத்திரப் பூவை
சூட்டிக்கொள்கிற போது
அந்தக் குயில்கள்
அர்த்தமில்லாத நாட்களை
அமைதியாகவே
அவர்களின்
அகராதியிலிருந்து
விடுதலை செய்தார்கள்.

சட்டத்துக்கே கூட
மவுனத்தை மட்டுமே
மொழி பெயர்க்கத்
தெரிகிறது.

வருங்கால ராஜாக்கள்
நிகழ்காலத்தில்
கப்பம் கேட்கிறார்கள்.

ராணிகளுக்கு
ரகசியத் தண்டனையா?

வரதட்சணை-
சொர்க்கத்தில்
நிச்சயிக்கப்பட்ட
திருமணத்துக்குப்
பூமியில் விதிக்கிற
நுழைவுக் கட்டணமா ?

நாட்கள்
நடந்து போவதால்
நசுக்கப்படுகிற
இந்தப் பூவுக்கும்
ஒரு புதிய காம்புக்கும்
புனுகு பூசியல்லவா
சமரசம் நடக்கிறது !

குருதட்சணைக் கொடுக்க
கோபப்படுகிற
எங்கள் இளைஞர்கள்
வரதட்சணைக்காக
வரிந்து கட்டுகிறார்கள் !

ஓ ! இளைஞனே !
ஒரு வர்க்கத்தின்
எலும்பையே
நரம்பாக்கிப் பார்ப்பதில்

உனக்கு
அப்படி என்ன
ஆசை ?

வசந்தத்துக்கு
வரதட்சணையைக் கொண்டா
மொட்டையடித்தீர்கள் ?

பாராமுகம் கொண்டு
பச்சைத் துளிர்களைக்
கத்தரித்தீர்கள்!

இப்போது-
அந்தப் பாடத் தெரியாத
பன்னீர்ப் பூக்கள்
இலையுதிர்த்துக் கொண்டு
இளைத்துப் போயிருக்கிறது !

சுவாசிக்க நினைத்ததற்காக
சுருவளியல்லவா
சூதாட நினைக்கிறது !

இமைகளைத் திறந்து
வைத்து விட்டு
இதயத்தை மட்டும்
மூடி வைத்தால்
இந்த
நியாயம்
வாழ்க்கைப்படாமல்
வாடிப் போகலாம் !

# இது ஆருடம் அல்ல

என் வீட்டு மூலையில்
அந்த இருதயம்
கிடந்தது.

முகவரி தொலைந்துபோன
அந்தப் புத்தகம்
அதன் முதற்பக்கத்தோடு
விவாகரத்து செய்திருந்தது.

தூசுகள் அல்லவா
அதன் பக்கங்களைப்
படித்துக் கொண்டிருந்தது!

இப்போது
நானும் படிக்கிறேன்.

அங்கேதான்
தொலைந்து போகாத
ஒரு
தூரத்து இளவரசனின்
ஆரம்ப முகவரி
அடைக்கலமாகியிருந்தது.

'ஆம்லெத்' என்று
அவனை

அந்த நூல்வரிகளில்
புதையல் எடுத்தேன்.

மூச்சு விட்டுக்கொண்டு
எழுத்துச் சமுத்திரத்தில்
முத்துக் குளித்தேன்.

'எல்சினோர்'
பட்டினத்தின்
சீதளக் காற்றில்
இவன் சுவாசம்தான்
இன்னும்
சிறகடிக்கிறது.

காற்று ஓடைக்கு
கதைதப்பின் பாடத்தை
கற்றுத் தருகிறது.

ஒரு முறையாவது
அவன் சுவாசத்தை
இரவல் கேட்டேன்.

இரவல் என்ன
என்
இருதயத்தை அவன்
இரத்தத்தால்
இரகசியமாய்
நிரப்பி விட்டான்.

இனி என்றைக்கும்
என் இருதயம்
இயங்கத் தெரியாமல்
நின்று போகாது!

இது
ஆருடம் அல்ல
அரக்க நம்பிக்கை !

இப்போது நான்
எல்லோருக்கும் சொல்ல
எழுந்திருக்கும்
புதிய ஞானி !

○

நம்பிக்கையின்
விலாசத்தை
நானூறு முறையாவது
விசாரியுங்கள்.

○

தோல்வியைத் திருப்பித்
தலைகீழாக எழுதுங்கள்
வெற்றி மட்டுமே
விரிந்து சிரிக்கும்.

○

தாகத்தைத்
தீர்த்து விடாதீர்கள் !
பிறகு
தாமிரவருணிகள்
வற்றிப் போகும் !

○

கண்ணீர்
சுரக்கக் கூடாது
என்று
உங்களின் கண்களுக்கு
கட்டளையிடுங்கள் !

ஏனெனில்
இமைகளைத் தாண்டி
இவைகள்
என்ன செய்யப் போகிறது ?

○

நட்சத்திரத்தைப்
பாருங்களேன்.

நம்பிக்கை
இருப்பதால் தான்
அது
நள்ளிரவிலாவது
மின்னிப் பார்க்கிறது !

பட்ட காயத்துக்காய்
எந்தப் பச்சை மரமும்
பதைத்ததில்லையே !

இன்னமும்
கிளைகளுக்காகத்தானே
கிளிப்பச்சை மேனியை
கீறி விடுகிறது !

○

நான் பார்க்கிறேன்-
எத்தனைக் கவிஞர்கள்
இந்த
மக்கள் தொகை
மணற் பரப்பில்
மண்டிக் கிடக்கிருர்கள் !

ஓ!
என் தேசத்து
இளைய கவிஞனே !

பத்திரிகைகளின்
பதிலுக்காக
தபால் தலைகளைத்
தவறாமல் அனுப்புகிறாயே !

உனது
கவிதையின் கற்பை
உன் கண்களால்
நீயேதான்
காயப்படுத்தினாய் !

ஒரே வாரத்தில்
ஓடிவந்து விடுகிற
உனது கவிதை
உனது உயரத்தை
பள்ளத்தாக்குகளுக்குப்
பட்டா போட்டு விடுகிறது !

தபால் தலைகள்தான்
உன் நம்பிக்கையின்
தலைக்கே
தண்டனையாக வருகிறது.

இல்லாவிட்டால்-
மரணித்துப் போகிற
உனது நம்பிக்கை
இன்னும் சில வாரமாவது
இருந்து பார்த்திருக்குமே !

அந்த
பத்தினிக் கவிதைகளை
பத்திரிகை அசுரர்களின்

பாராமுக
கற்பழிப்புக்காகவா
பதில் வேண்டிஞய் ?
இல்லையே!

நீ
கவரிமான்!
உரோமமாய் உதிர்ந்து
விழுந்த உன்
கவிதைக்காய்
உயிரை விடுகிருயே !

இனி-
உதிர்ந்தவைகளை
எடுத்து
ஒட்டிக்கொள் !
ஆனுல்
உயிரை விடாதே !

இனி அவர்களுக்கு
நம்பிக்கைக் கவிதைகளை
நன்ருக எழுதிவிடுங்கள்

O

இது
ஒரு ஞானி சொல்கிற
நல்ல பாடம் !

# உரக்க அழுகிறது உள்ளம்

மௌனமாய்
துடிக்கிற இதயம்
என்ன சப்தமாய்
அழுகிறது !

அது
ஒரு சின்ன
யுகத்தை நினைத்து
பெரியதாய்
சுவாசிக்கிறது !

1869 அக்டோபர் 2
யாருக்கும்
தெரியாமல்
எதார்த்தம்
ஒரு ஏகாதிபத்தியத்தின்
இந்திய சுவாசத்துக்கு
இறுதிநாள்
குறித்துக்கொண்டது !

ஒவ்வொரு
இந்திய முதுகிலும்
ஏறியிருந்த

அடிமை பாரத்தில்
ஒரு அருக விதையின்
ஆணிவேர் விழுந்தது !

சிலிர்த்துக் கொண்ட
சரித்திரத்தின்
மயிர்க்கால்கள்
சரிந்து கொண்டிருந்த
சமுதாயத்தைத்
தாங்கிப் பிடித்தது !

அகிம்சை-
உரோமமல்ல
உதிரம் உதிர்வது
பிடிக்காத
கவரிமான் ஜாதி !

காந்தியாரின் ஜனனம்
காயப்பட்டுக் கிடந்த
அகிம்சையின் கால்களை
சிநேகமாய் வருடியது.

அவன்—
அரை நிர்வாணத்தை
அங்கீகாரம்
செய்துவிட்டு

நிஜ நிர்வாணத்தைக்
கிழித்துப் போட்டவன் !

தண்டி—
அங்குதானே

உணர்ச்சியை
இழந்துபோன
இந்தியனுக்கு
உப்பின் அறிமுகம்
நடந்தது.

அவன்
பாத ஸ்பரிசத்தில்
ஒவ்வொன்றாய்க் கிடந்த
மணலுக்குக் கூட
ஒட்டிக் கொள்கிற
உணர்ச்சி வந்தது!

ஒரு சாம்ராஜ்யத்தின்
சலசலப்பு சப்தம்
மரணித்த போது
ஜெயித்த அகிம்சை
ஒரே ஆண்டுக்குள்
மூன்று
இந்தியத் தோட்டாக்கள்
இவனை
முத்தமிட்டபோது
எப்படித் தோற்றது?

மவுனமாக
துடிக்கிற இதயம்
என்ன சப்தமாய்
அழுகிறது!

நன்றி: தாய்

# பதிலால் கற்பழிந்த கேள்வி

அவன் கண்ணீருக்கு
அரித்தே பழகிவிட்ட
அதிகார அமிலத்தின்
மீது கூட
ஆதிக்கம் உண்டு!

அவன் இதயம்
இரத்தத்தைக்
கண்ணீராகத்தான்
வடிக்கிறது.

O

ஐந்தாண்டுக் கொருமுறை
அவனுக் கொரு
திருவிழா
எடுக்கிறுர்கள்.

வண்ணம் பூசிக்கொண்ட
வால்போஸ்டர்களில்
அவன்
முகம் பார்த்துக்கொள்வான்.

அரசியல் வாதிகளின்
அணிவகுப்பு மரியாதையை

ஆட்சேபனை இல்லாமல்
ஏற்றுக் கொள்வான்.

இந்தியாவுக்கே
பாரமாகப்படுகிற
இவனை சுமக்கத்தான்
எத்தனை
வாகனங்கள் ?

அந்த மூல விக்கிரகம்
விழா முடிகிற போது
வீதியிலே நிற்கும் !

சுமந்து வந்த
வாகனத்து கொடிகள்
மட்டுமே
கையசைத்து விட்டுப்
போகும்!

சக்கிரவர்த்தியாக
வந்தவன்
எந்த
சாம்ராஜ்யத்துக்கும்
சொந்த மில்லாத
சன்னியாசியைப்போல!

அவன் இதயத்தோடு
இயலாமை சமாதானம்
பேசிவிடும்.

பாவம் !
ஒரு பதில்.

அதன் கேள்வியையே
கற்பழிக்கிறது !

O

ஆள்காட்டி விரலில்
அவனுக்கொரு
அடையாளமிட்டார்கள்

அது இன்னுமொரு
ஐந்தாண்டுக்கென்று
எழுதப்பட்ட
அடிமைச் சாசனம் !

அந்த மந்திர மை
மவுனமாக
மடிந்து போகிற நாளில்
அந்த
அரசியல் ராஜாக்களின்
அரண்மனை வாசலுக்குக் கூட
அவன் அந்நியனாகிப் போனான்!

O

எவன் வீட்டு
எச்சிலோ
இவன் மீது
விழுந்து விட்டது.

யார் மீதாவது
உமிழ்ந்து விட வேண்டும்...
இவனுக்கும்
ஆசைதான்.

தன்மீதே
இயலாததால்

பூமியின் முகத்தில்
துப்பிவிட்டுப் போகிறான் !

○

புன்னை மரமாக
நின்றவனுக்கு
தென்னை மரத்தைப்போல்
தேகத்தில்
கூன் விழுந்து விட்டது!

தேர்தல் பாடசாலையில்
பாடம் தெரியாமல்
விழித்தவனுக்கு
பட்டமளிப்பு விழா !

ஜெயித்தவன்
கொடுப்பது
'ஞானி !'

தோற்றவன்
தருவது
'துரோகி !'

இருபத்தோருவது
வயதிலே
முட்டாளாகிப் போனவனுக்கு
இரண்டு பட்டங்களா ?

எந்தப் பட்டத்தை
ஏற்பது ?

ஒரு பதிலால் அல்லவா
அதன் கேள்வியே
கற்பழிக்கப் படுகிறது !

அவனுக்குத்
தெரியாமலேயே
அவனைப் பற்றி
அறிவாளிகள்
ஒரு
அரிச்சுவடி
எழுதினார்கள் !

அவன் மீது
விழுகிற அடிகளுக்கு
அதில் தானே
அடையாளம் இருக்கிறது !

'அரசியல் சட்டம்'
என்ற அந்த
அரிச்சுவடியின்
ஆரம்பத்திலே
அழகான எழுத்தில்
அச்சடித்தார்கள்-

'அவனுக்குச் சமர்ப்பணம்'
என்று.

அந்த பதிலால்
கற்பழிக்கப்பட்ட
கேள்வி
பரிதாபமாக
விழிக்கிறது !

# சுத்தமான சுயமரியாதைக்காரன்

செப்டம்பர் பதினொன்று
ஒரு
விடியல் கீதத்துக்கு
அதன்
விளிம்பு வரி
எழுதப்பட்ட நாள்.

ஒரு புதிய
நினைவைச் சுமந்து
கண்ணுக்குள்
சிலிர்க்கிறது !

செந்நிறப் பூச்சிட்ட
மந்திரக் கண்ணுக்கு
பார்வை ராகம்
மறந்து போனதோ !

காற்றிடம் கூட
கடன் பட்டுக் கிடந்த
ஒரு எரிமலையின்
சுவாசம்
எங்கோ பறந்தது !

அந்த்
கங்குலின் குஞ்சு

கறுப்புச் சட்டை
போட்டிருக்குமாம்!

அடடா!
இவன்தானே
சுத்தமான
சுயமரியாதைக்காரன்!

எட்டயபுரத்தின்
பட்டியலில்
பிரம்மன்
எழுதிய பெயர்
சுப்பிரமணி.

எடுத்து எழுதியவன்
திருத்திக் கோண்டான்-
பாரதி!

அந்த நாணலுக்கு
நரம்பின்
தெம்பிருந்தது.

நெருப்பில்லாமல்
இவன் வீட்டு அடுப்பு
விதவையாக
இருந்த நாளில்
வறுமைதானே
வீட்டுக்கே வேலி!

அடுப்பின் அடிவானத்தில்
நெருப்பின் சிவப்பு
நெருடிய போதெல்லாம்
வறுமைக் காற்று

இவன்
வீட்டுக்குள் வீசியது!

நெருப்பின் தவம்
கலைந்த போது

அந்த ஹரிதுவாரத்தில்
ஒரு
கவிதா கங்கைக்கு
கால் முளைக்கும்.

இல்லாமையின்
நினைவுச் சின்னங்கள்
அழிகிற வரைக்கும்
அந்த கங்கைகளில்
அவனே நீராடுவான்.

மலருக்கு
மகரந்தம் ஒரு
பாரமா?

ஆனால்
அவன் பசிக்கு
மருந்து போட
நினைத்த
அட்சய பாத்திரங்கள்
ஓட்டையாய்
இருந்தது!

அவன் ஊர்வலம் போக
செய்த பல்லக்கல்லவா
பாடையாக வந்தது!

ஆமாம்!
ஆணையிலல்லவா.

அவனுக்கு
அந்த நாளின்
தூது வந்தது !

வசந்தமே
இலையுதிர்த்துக் கொண்டதே !

தவக் கோலத்தின்
இறுதி அத்தியாயத்தில்
இவனுக்கு
இடம் போட்டு
வைத்திருந்தோமே !

உண்மைதான்-
இந்தியாவிற்கு
உயிர் வந்த நாளில்
இந்தச் சக்கிரவாகம்
இறந்தல்லவா
போயிருந்தது!

நாற்பது ஆண்டுக்குள்
ஒரு யுகத்தின்
மூச்சுக்கே
முடிவுரை
எழுதப்பட்டதே !

பாரதி !
வறுமை தேசத்தின்
வசந்த ராஜனே !

அட்சய பாத்திரத்துக்கு
அதிபதியாகவா
நீ
ஆகாயம் போனாய் ?

# ஒரு குளம் ஒப்பாரி வைக்கிறது

வானம் எங்களோடு
ஓயாமல்
ஒத்துழையாமை போராட்டம்
நடத்துகிறதே !

எங்கள்
இதயம் மட்டுமல்ல-
தேகம் கூட
வெடித்துப் போகிறதே !

வருண பகவானுக்கு !
என்ன
வருட் விடுமுறையா ?

'தோற்றுப்போன
குண்டுராவ்
வருண பகவானுக்கு
வாரிசாக
நியமனம்.'
செய்தி வரப் போகிறது!

ஓ !
பஞ்சு மேகங்களே!
யாருக்குக் காயம் பட்டது...
இப்படி ஓடுகிறீர்கள் ?

என்னையும் பாருங்களேன்
என் தேகத்தின் வெடிப்பு
இந்த தேசத்தையே
பாதிக்கிறதே !

பஞ்சு மேகங்களே !
எங்கள் காயங்களில்
ஒட்டுப் போட
ஓடி வாருங்களேன் !

எங்களுக்குக்
கண்ணீர் சிந்தக்கூட
தண்ணீர் இல்லை.

ஓ ! மேகங்களே !
உங்கள்
உயரங்களுக்கு ஏறி வர
எங்களுக்கு உரிமையில்லை...
நாங்கள் (மா) நிலங்கள் !

நீங்களாவது
இறங்கி வாருங்களேன்.

அதிக அதிகாரம் கேட்டு
அமெரிக்க விஞ்ஞானிகளுக்கு
ஆள் அனுப்பியிருக்கிறோம்.

அவர்களின்
மருந்து மந்திரங்களில்
நீங்கள் பூமிக்கு
வந்துதான் ஆகவேண்டும்.

ஓ ! வானமே !
உனது மின்னல் கீற்றால்

எனது மேனிக்கு சுகமில்லை
இடியை எதிர்பார்த்து
காதை மூடுகிறோம்.

எங்களின்
சோக ராகம்
மழைத் துளியின்
துல்லிய ஒளியில்
தோய்ந்து போக வேண்டும்.

நாங்கள்
வசந்தத்தில் உனக்கு
வாழ்த்துப் பாடுவோம்.

ஓ, மேகங்களே !
பூமிக்கு வாருங்களேன் !

இந்தக்
குளத்துக் குழிகளில்
இளைப்பாற
ஓ, மேகங்களே!
பூமிக்கு
ஓடி வாருங்களேன் !

நன்றி : தாய்

# காவிரி

அகத்தியனின்
ஆரம்ப ஆரோகணத்தில்
முளைத்தது உனது
அஸ்திவாரம் !

கங்கை நீரை
கமண்டலக் கருவறையில்
சுமந்து
காக தாகத்தால்
வெளிப்பட்ட உனது
வரலாறே
எங்களுக்குச் சொந்தம்.

நீரோ
சில நீரோக்களுக்குச்
சொந்தமா?

நீ
பிறந்த வீடு
கருநாடகம் தான்
ஆனால்
புகுந்த வீடு
தமிழகம் தானே !

எனவேதான் நீ
எங்களுக்குச் சொந்தம்
என்கிறோம்.

பிழையான இடத்தில்
பிறப்பெடுத்ததால்தான்
நீ
தமிழகம் நோக்கி
தலைதெறிக்க ஓடினாயோ ?

நீ
கங்கை நதியின்
கருநாகப் பதிப்பு.

உன்னை
கருநாடகக் குகைக்குள்ளே
கடுங்காவல் சிறை
வைத்தவர்கள்
எங்கள்
நியாயத் தீர்ப்புக்கு
நெடுநாள்
காக்க வேண்டாம்.

எங்களின்
வசந்த விழாவிற்கு
வரவேற்பு தோரணமே!

ஓ !
உன்னைப் பிரிந்து
தமிழ்ப் பூமியா

எங்கள்
கண்களுக்குள்
இன்னுமொரு
காவிரி கர்ப்பம் தரிக்கிறதே!

ஓ !
குடகுக் குமரியே !
நீ ஓடிவராவிட்டால்
எங்கள்
ஒருமைப் பாட்டுக்கு
நடக்கக் கூட முடியாது !

நன்றி: தாய்

# மின்னல்

கறுப்பு மேகங்கள்
பறக்கிறபோது
விரிக்கிற
வெள்ளை இறக்கை

அழப்போகிற வானத்தின்
சந்தோஷச் சிரிப்பு

மேக விரிப்புகளின்
ஓர உரசல்கள் தந்த
உணர்ச்சிப் பிழம்புகள்

நட்சத்திர வானின்
ஆஸ்தான நர்த்தகி

இடி முழக்கங்களின்
விசேஷ தூதுவன்

கல்யாண மேகங்களின்
கனத்த முத்தத்தில்
கிடைத்த மிச்சம்

எந்தக் கப்பலுக்காக
இந்தக் கலங்கரை விளக்குகள்
கடமையைச் செய்கின்றன ?

நட்சத்திர நெஞ்சங்களில்
எதையோ தேடுகிற
நொ(ண்)டி மனிதன்

முகில்கள்
ஈன்றெடுத்த
போட்டி நிலவுகளின்
பவுர்ணமி வெளிச்சம்

நன்றி : தாய்

# பகட்டின்றி பிறந்த தேவா

மார்கழியின் குளிருக்குள்ளே
மகத்தான இதத்தை வைத்து
மாடுகளின் கொட்டிலிலே
மகவாக உதித்தவனே!
ஊர்கழித்து ஒதுக்கியதால்
உகந்ததாய் ஓரிடத்தில்
பார்களிக்கும் பெருமை சூடி
பகட்டின்றி பிறந்த தேவா !

நார்கிழித்து மாலை செய்து
நகரெல்லாம் சூடிவிட்டு
தேர்களிலே உன்னை வைத்து
தெருவெல்லாம் பாடிவிட்டு
கார்கால இருட்டைப் போல
கபடுகளை நெஞ்சில் வைத்தால்
நீரில்லா நிலம் போல
நீதியும் அழிந்துபடும்

யார் செய்த பழி யாவும்
ஏற்றுத்தான் சுமந்தாயோ !

கூர்முனையாம் ஈட்டிக்கு
குறியாகிப் போனாயோ!
வேர்களிலே வெந்நீரை
விதைத்திட்டு போவோரை
பார்வையால் துடைக்கின்ற
பண்புள்ள என் தேவா !
சோர்கின்ற மனுக் குலத்தின்
சோகத்தைத் துடைத்திடுவாய் !

நன்றி: தாய்

# நட்சத்திர (மா) நாடு

கறுத்துப் போனதால்
அழுத்துக்கொண்ட
அமாவாசை
ராத்திரி

முழுநிலா நாளில்
மூர்ச்சையாகிக் கிடந்த
நட்சத்திரங்கள் கூட
முகம் காட்டி
திரிந்தது.

வான இருட்டில்
மூங்கிலாய்
துருத்திய
மின்னல் கோடுகள்

சின்னதாக
சிரித்துக் கிடந்த
வான மீன்கள்
வழக்கமான
மாநாடு கூடியது.

ஒரு
சண்டி நட்சத்திரம்

சன்ன ஒலியில்
சாதாரணமாய் பேசியது.

'தனித் தனியாய் மின்னி
தாழ்ந்து போவதா?
உருத்தாய் இருப்போம்
ஒன்ருய் மின்னுவோம்...'

முதலில்
மின்னலே கூச வைப்போம்
பின்னர்
நிலவையே விரட்டலாம்

வான சபையில்
இதற்கு
வரவேற்புத் தீர்மானம்
நிறைவேறப்போகிற
நேரத்தில்
ஒற்றை மின்னல்
ஓங்கியடித்தது

இருட்டை எடுத்து
வெளுக்கப் போட்டு

மேகத்தை விரித்து
வானத்தை மூடியது

அந்த
புள்ளி நிலாக்கள்
புரியாமல் விழித்தது

அவைகள்
அர்த்தம் தேடி
எங்கெங்கோ ஓடியது

# தாய்

நினைவுகளை
லயம் பிரித்துப் பார்த்து
மனம்
ஆனந்தப்பட்டுக்
கொண்டிருந்தது

○

எனது
அறிவின் பக்கத்தில்
அகரம் கூட
இல்லாமல்
இருந்த நாளில்
அறிமுகம் இல்லாமலே
நான் அங்கீகாரம்
செய்த முதல் ஜீவன்.

○

தாலாட்டுகளில்
எனக்கொரு
பூமாலை பூட்டியவள்
என் கண்ணீரை
நிறமாறிப் போன
இரத்தமாக
நினைத்துக் கொண்டாள்

எனது
அழுகை பாஷையின்
அர்த்தங்களை
மொழி பெயர்த்த
ஒரே
மனித அகராதி

O

தோள்களில்
என்னையும்
மனதில் என்
நினைவையும்
சுமந்தே
சந்தோஷிக்கிறது
அந்த சக்கிரவாகம்

O

என்னைத் தீண்டியதற்காய்
இயற்கை மீது கூட
சப்தமில்லாமல்
அவள் வாசித்த
யுத்தப் பிரகடனத்தை
நானறிவேன்

O

மார்கழி மாதத்தை
மவுனமாக
சபித்துவிட்டு
அந்த மனித மலர்
தன் தேகக் கூட்டில்
என்னை வளர்த்துவிட்டது

எனது
சுவாசத்தின்
சூட்டிலேதான்
அவள் வாழ்க்கையின்
கோடைகளை
குறியிட்டுக் கொண்டாள்

O

நான்
பிறக்கு முன்னே
எனக்குப்
பெயர் சூட்டவும்
பிறந்த பின்னர்
பாராட்டவும்
அவள் மனதின்
முற்றத்தில்
வண்ண வண்ண
கோலமிட்டு
வசந்தங்களை
சிருஷ்டித்துக் கொண்டாள்

O

நான்
அக்னிப் பிரவேசங்களுக்கு
அடியெடுத்த போதெல்லாம்
கண்ணீர்த் துளிகளால்
எனக்குக்
கவசம் போட்டுவிட்டாள்

O

எனக்காகவே
இரத்தம் சேர்த்து
வைத்திருக்கிற

அந்த
பெலிக்கான் பட்சியின்
நினைவுகளை
என் நெஞ்சு
இழை இழையாய்
பிரித்துப் பார்த்துக்
கொள்கிறது
இன்பத்தை
தொட்டுக் கொள்கிறது.



# 'கவிதாபானு' பதித்தவை

---

## வலம்புரிஜான் படைப்புகள்

- பாரதி ஒரு பார்வை
- காதல் கடிதங்கள்
- நான் விமர்சிக்கிறேன்
- தாகங்கள்
- சீனம் சிவப்பானது ஏன்?
- உள்ளதைச் சொல்லுகிறேன்
- சிந்திக்கத் தெரிந்த சிலருக்காக
- இதோ உங்கள் வேதம் வருகிறது (புதுக் கவிதை தொகுதி)
- என் காலத்தில் இவர்கள் கவிஞர்கள்
- காதம்பரி சொன்ன கதைகள்
- ஓடக்காரனின் உல்லாசப் பயணம்
- காந்தியா? அம்பேத்காரா?
- உங்களைத்தான் அண்ணே!
- சில உரத்த சிந்தனைகள்
- விதைகள், விழுதுகள்
- ஒரு ஊரின் கதை
- எழுச்சி நியாயங்கள்
- சுயாட்சியா? சுதந்திரமா?
- தெற்கு என்பது திசை அல்ல!

- மகரந்தங்கள்
- பூக்கள் பறிப்பதற்கு அல்ல !
- இவர்கள் அறிந்தே செய்கிறார்கள்
- நீர்க்காகங்கள்
- காற்றின் சுவாசம்

**செல்வி ஜெயலலிதா**
படைப்புகள்

- நீ இன்றி நான் இல்லை
- எண்ணங்கள் சில
- மனதைத் தொட்ட மலர்கள்

**பேராசிரியர் எழிலமுதன்**

- நூற்றாண்டு கண்ட பாரதி

**சோ. சேசாசலம்**

- இந்துச் சட்டப்படி மகளிர் சொத்துரிமை

**கவிஞர் மணிமொழி**

- ரத்தம் சரணம் கச்சாமி

**பொன். ஜெயந்தன்**

- நமது வானத்திற்கும் கீழே

**சூர்யகாந்தன்**

- இனி பொறுப்பதில்லை

**ஜெயந்திராஜன்**

- ரோமிய மகுடம்

**கோ. ச. பலராமன்**

- முடியாத முற்றுப்புள்ளி

**கவிஞர் இளந்தேவன்**

- மூகாம்பிகையே ! முழுநிலவே !



கவிஞர் "மோசே" அவர்களின் கனல் மணக்கும் கவிதைப் பூக்கள் வாயவிழ்ந்து வண்ண மகரந்தம் சிந்தும் ஆம்பல் மலர்களாக அழகு காட்டுகின்றன.

"பாடத் தெரியாத பன்னீர்ப் பூக்கள்" ஒரு கண்ணீர் அஞ்சலி போல கரைந்து உருகும் தலைப்பாக இருந்தாலும் பாடல்களில் இறுக்கமான ஒரு உப்பு வண்டியின் ஊர்வலத்தையே நான் பார்க்கிறேன்.

இவர் தொடர்ந்து எழுதி மனிதனைப் பாடுகிற எழுத்துக்கும்; இனம், மொழி என்கிற சுற்றுச் சுவர்களை ஊடறுத்து, மானுடத்தை நேசிக்கிற எண்ணத்திற்கும், எழுச்சி மிக்கக் கவிதைத் தலைவராக வேண்டும் என்பது எனது கனவு.

வலம்புரிஜான்

PRINTED BY
PELICAN INDIA
MADRAS-600 017